6th March 1958]

* 217 Q.—Sri K. VINAYAKAM (on behalf of Sri K. R. Viswanathan) : Will the Hon. the Minister for Revenue be pleased to state— 1-10 p.m.

(a) the amount allotted by the Central Government to the Madras State towards expenditure on the National Water-supply and Sanitation Scheme for 1956–57;

(b) the amount that remained unspent during that year;

(c) whether the Government have recommended to the Central Government that areas, where guinea worm disease is prevalent, should also be brought under the above scheme; and

(d) if so, the nature of the reply received from the Government of India?

The Hon. Sri M. A. MANICKAVELU : (a) The Government of India allotted a sum of rupees fourteen lakhs to this State in 1956–57, for the National Water-supply and Sanitation (Rural) Programme.

(b) The amount was not drawn as the grant previously sanctioned by the Government of India was not fully utilised.

(c) No, Sir.

(d) Does not arise.

Sri K. VINAYAKAM : Will the Government take steps to reiterate their request once again to include the areas which are affected by guinea worm diseases so that they may be assured of good, potable drinking water?

The Hon. Sri M. A. MANICKAVELU : Yes, Sir. We are trying our best to see that good drinking water is made available especially in areas where that is very necessary.

Sri A. GOVINDASAMY : சுகாதார குறைவான தண்ணீரை குடிப்பதனால்தான் இந்த வியாதி அதாவது நரம்பு சிலந்தி போன்ற வியாதி வருகிறது. அவை தீர்க்கவே முடியாத நிலைமையில் இருப்பதால் அந்த நோயினால் பாதிக்கப்பட்ட பகுதியில் இதை தீர்த்து வைப்பதற்கு அரசாங்கம் என்ன திட்டத்தை கொண்டுவரப் போகிறார்கள் என்று கேட்க விரும்புகிறேன்.

The Hon. Sri M. A. MANICKAVELU : இந்த நரம்பு சிலந்தி நோயை போக்குவதற்கு மாத்திரமல்ல, இதை அடியோடு ஒழித்துக் கட்டுவதற்கு வேண்டி திட்டமிட்டு அதன்படி வேலைகள் கொஞ்சம் கொஞ்சமாக அமுல் செய்யப்பட்டு வருகிறது. இந்த மாதிரி இடங்களில் நல்ல தண்ணீர் கிடைப்பதற்கும் வேண்டிய திட்டம் போடப்பட்டிருக்கிறது.

Srimathi T. N. ANANDANAYAKI : மந்திரி அவர்கள் கேள்விக்கு பதில் அளிக்கும் போது இந்த வருடம் மத்திய அரசாங்கத்திலிருந்து அனுமதித்த 14 லட்சம் ரூபாய் முழுவதும் செலவு செய்யப்படவில்லை என்று சொன்னார்கள். இந்த பணம் என் செலவு செய்யப்படவில்லை. செலவு செய்வதற்கு ஏற்பட்ட காலதாமதம் என் என்பதை மந்திரி அவர்கள் விளக்குவார்களா ?

The Hon. Sri M. A. MANICKAVELU : இதை விளக்குவதற்கு இஷ்டம்தான். ஆனால் இது சந்தர்ப்பமல்ல.

[6th March 1958

DR. SRIMATHI T. S. SOUNDARAM RAMACHANDRAN : இறங்கும் கிணறுகள் அதிகமாக உள்ள இடங்களில்தான் நரம்பு சிலந்தி நோய் ரொம்ப ஜாஸ்தியாக இருக்கிறது. ஆகவே இந்த இறங்கும் கிணறுகளை சுகாதார முறையில் கட்டினால்தான் இந்த நரம்பு சிலந்தி நோயை போக்கடிக்க முடியும் என்றுள்ள கருத்தும் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. இந்த நரம்பு சிலந்தி நோய் பிடித்த கிராம ஜனங்கள் வேலை செய்ய இயலாமல் பீடிக்கப்பட்டவர்கள் கஷ்டப்படுகிறார்கள். ஆகவே அவர்களுடைய பொருளாதார நிலையை உயர்த்தவும், இந்த நோயை அடியோடு ஒழிப்பதற்கும் இந்த எண்டமிக் ஏரியாவில் ஒரு திட்டத்தை சர்க்கார் எடுத்துக் கொள்வார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இந்த நோயை ஒழிப்பதற்கு திட்டம் இருக்கிறது. அதற்காக இரண்டொரு மாதங்களுக்கு முன்னால் கமிட்டியும் கூடி தீவிரமாக என்ன நடவடிக்கை எடுக்கவேண்டும் என்பதைப்பற்றி ஆலோசித்து அதன்படி வேலைகளும் செய்யப்பட்டிருக்கிறது.

SRI A. V. P. ASAITHAMBI : ஸார், நூற்றுக்கணக்கான கிராமங்களில் குடிதண்ணீர் வசதி கிடைக்க வில்லை என்று சொல்லப்பட்டு வருகிறது. ஆகவே இந்த மாதிரி குடிதண்ணீர் வசதி யில்லாத கிராமங்களை எல்லாம் ஒரு சர்வே எடுத்து பொதுவாக குடி தண்ணீர் கிடைப்பதற்கு கிணறுகள் வெட்டிக் கொடுப்பதற்கு சர்க்கார் உடனடியாக ஏதாவது நடவடிக்கை எடுக்குமா ?

THE HON SRI M. A. MANICKAVELU : கூடுமான வரையில் கிராமங்களுக்கு குடிதண்ணீர் சப்ளை செய்யப்பட்டுதான் வருகிறது. ஆனால் இந்த ராஜ்யம் பெரிய விஸ்தீர்ணமுள்ளதாக இருப்பதனால் உடனடியாக செய்து கொடுத்துவிட முடியாது, கொஞ்சம் கொஞ்சமாகத்தான் நிறைவேற்றிக் கொடுக்க முடியும்.

SRI. M. S. SELVARAJAN : தேசீய தண்ணீர் சப்ளை திட்டத்திலிருந்து மத்திய சர்க்கார் கொடுத்த உதவியை சரியாக உபயோகப்படுத்தப் படவில்லை என்று தெரிகிறது. இதற்கென்று ஏற்கனவே பல திட்டங்கள் தயாரிக்கப்பட்டிருக்கிறது. பல வருடங்களுக்கு முன்பே தயாரிக்கப்பட்ட அத் திட்டங்கள் தேவையான சில இடங்களுக்கு எட்டவில்லை. ஆகவே அதில் வேலை செய்வதற்கு ஏன் காலதாமதம் ஏற்படுகிறது ? இவைகளை உடனே தேவையான இடங்களுக்கு அமுல் செய்யப்படுவதற்கு அரசாங்கம் வேண்டிய பரிசீலனை நடத்துமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இந்த வேலை செய்வதில் காலதாமதம் ஏற்படுவதன் காரணம் ஒன்று போதிய அளவில் டெக்னிக்கல் பர்ஸனல் கிடைக்கவில்லை என்பது ஒன்று. மற்றொன்று இதற்கென சில சாமான்கள் கிடைப்பதும் கஷ்டமாய் இருக்கிறது. இந்த மாதிரியான பல காரணங்கள் இருக்கின்றன. சீக்கிரமாக நடத்த வேண்டும் என்பதுதான் அரசாங்கத்தின் ஆசை.

SRI N. K. PALANISAMI : ஸார், இரண்டு மாதங்களுக்கு முன்னால் இதைப்பற்றி ஆலோசிக்க ஒரு கமிட்டி கூடி சில முடிவுகளை எடுத்திருப்பதாக அமைச்சர் அவர்கள் கூறினார்கள். அந்த முடிவுகளின் விவரம் என்ன என்பதை சொல்ல முடியுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : அவைகள் எல்லாம் ஞாபகம் இல்லை. அதிகமாக இதைப்பற்றி பிரபகண்டா செய்ய வேண்டும், கெட்டித்துணி போட்டு வடிகட்டின பிறகு அந்த குடிதண்ணீரை உபயோகப்படுத்த வேண்டும். அந்த கிணறுகளில் இறங்காதபடி பார்ப்பது, இன்னும் மருந்து வகை மூலமாக சிகிச்சை செய்வதற்கும் வேண்டிய முடிவுகள் செய்யப்பட்டிருக்கின்றன.

6th March 1958]

SRI K. ANBAZHAGAN : தேசிய தண்ணீர் வழங்கும் திட்டத்தி லிருந்து உதவிகள் ஒதுக்கப்பட்டிருந்தும் அவற்றை செலவு செய்து நிறை வேற்றாமல் இருப்பதற்கு காரணம் இவைகளைப்பற்றி திட்டம் போடாமல் இருந்து வருகிறதா ? அல்லது திட்டமிட்டதை அரசாங்க யந்திரங்கள் சரியாக நிறைவேற்றாமல் இருக்கிறார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இது ரூரல் வாட்டர் சப்ளை ஸ்கீமைச் சேர்ந்தது. ரூரல் வாட்டர் ஸப்ளை ஸ்கீம் வேறு, தேசீய வாட்டர் ஸப்ளை ஸ்கீம் வேறு.

* 218 Q.—SRI A. GOVINDASAMY : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(a) the number of drinking-water wells dug by the Government from 1947 to 1957 in the Kadambuliyur Firka, South Arcot district ;

(b) the amount spent thereon ; and

(c) the number of wells not in use?

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) Thirty-nine.

(b) Rupees 85,142.

(c) Nine.

SRI A. GOVINDASAMY : இந்த காடாம்புலியூர் பகுதியில் உள்ள கிணறுகளில் சூரிய வெளிச்சம் சரியாக படுவதில்லை. அதன் காரணமாகத்தான் அங்குள்ள கிணறுகளில் தண்ணீர் குடிதண்ணீருக்கு உபயோகப்படுவதில்லையாதலால் குழாய் கிணறுகள் மூலம் குடித்தண்ணீர் வசதி செய்து கொடுக்க சர்க்கார் முயற்சி எடுக்குமா ?

MR. SPEAKER : கனம் மந்திரி அவர்கள் அடுத்த கேள்விக்கும் சேர்த்து பதிலை சொல்லலாம். அதன் பின் உப கேள்விகள் கேட்கலாம்.

* 219 Q.—SRI A. GOVINDASAMY : Will the Hon. the Minister for Revenue be pleased to state —

(a) whether there is any proposal to provide protected water-supply to Kadambuliyur Firka, South Arcot district from the river Gadilam ;

(b) if so, when it will be given effect to ; and

(c) the expenditure to be incurred thereby?

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) Yes, Sir.

(b) A report from the Inspector of Municipal Councils and Local Boards regarding the ability and the willingness of the Local bodies concerned to meet the cost of the maintenance of the scheme is awaited.

(c) The approximate cost of the scheme is Rs. 22·8 lakhs to instal and Rs. 34,500 to maintain per annum.

SRI A. GOVINDASAMY : என்னுடைய கேள்விக்குப் பதிலளிக்கப் படவில்லை.

MR. SPEAKER : உங்கள் கேள்வியை திருப்பிக்கேளுங்கள்.

SRI A. GOVINDASAMY : அந்தப் பகுதியில் குழாய் கிணறு கள் மூலமாக தண்ணீர் வசதி செய்து கொடுக்க அரசாங்கம் ஏதாவது திட்டமிடுமா என்று கேட்கிறேன்.